பொழிப்புரை.

எவன் இந்த பிரும்ம வித்தையை (இதில்)சொல்லியவிதமாய் அறிகின்றனோ, அவன் பாபத்தைவிட்டு சிரேஷ்டமும் அனந்தமுமான சொர்க்கலோகத்தில் வசிக்கின்றான்.

விசேஷ உரை.

மேலே சொல்லியபடி சாதனைசெய்து பிரும்மக்கியானத்தையடைந்தால் முக்தி கிடைக்கின்றது. பாபத்தையும் அதன் பலனாகிய துக்கத்தையும் முற்றும் விட்டு, சிரேஷ்டமான சொர்க்கலோகத்தில் அநந்தகாலம் வரைக்கும் ஆநந்தத்தை அனுபவித்துக்கொண்டிருப்பதே முக்தியாம். மனுஷிய சரீரத்தை விட்டு எந்த உத்தமலோகத்தை அடைந்து வசிக்கின்றனோ அந்த லோகம் சொர்க்கம். எந்த ஆத்மா எந்த லோகத்துக்கு யோக்கியமானதோ அந்த லோகத்தையடைகின்றது. பிரும்மோபாசகன் சிரேஷ்டமான சொர்க்கலோகத்தை அடைந்து அங்கே அநந்தகாலம் வசிக்கின்றான். அவன் தாழ்வையடைவதில்லை. அநேகர் பிரும்மத்தில் லயப்படுவது முக்தியென்கிறார்கள். அது முக்தியல்ல, விநாசமென்று அறியத்தக்கது. பாபத்தினின்று முற்றும் விடுபட்டு பிரும்மத்தை நேராக தரிசிக்கக்கூடிய அநந்த ஆநந்தத்தைத்தரும் லோகத்தையடைந்து தேவதைகளோடு வசிப்பதே உண்மையான முக்தியாம்.

He who knows this Upanishad, and has shaken off all evil, stands in the endless, unconquerable world of Heaven, yea, in the world of Heaven.

---

(145). முண்டகோபநிஷத்து.

3-வது முண்டகம் 2-வது கண்டம் 4-வது வாக்கியம்.

ஏதைருபாயைர்யததேயஸ்து வித்வான்
தஸ்யைஷ ஆத்மாவிசதே ப்ரஹ்மதாம.

பொழிப்புரை.

எந்த பிரமஞானி, இந்த உபாயங்களால் பிரமத்தையடைய முயலுகிறாரோ; அவருடைய ஆன்மா பிரமமென்னும் வீட்டையடைகின்றது.

விசேஷ உரை.

எந்தப்பிரமஞானி ஸத்தியத்தைப்பற்றி, தருமத்தைத் தொடர்ந்து,நற்கருமங்களை அநுஷ்டானத்திற்கு கொண்டுவந்து; தாய் தந்தை ஆசாரியர் இவர்களிடத்தில் அன்புவைத்து, பிரமத்தை அடையம் நிமித்தம் முயற்சி செய்கிறாரோ, அவர் பிரமமென்னும் வீட்டையடைகின்றார். அவர் பிரமத்தையடைந்து அவருடன் நித்தியமாககூடிவாழ்கையால் உண்டாகும் பேராநந்தத்தையனுபவிக்கிறார்.

The soul of that knower of God, who exerteth himself through these means to obtain God, entereth God as its habitation. ———

## (146). தைத்திரியம்

சிக்ஷாவல்லி 11-வது அநுவாகம் 5-வது வாக்கியம்.

**ஏஷ ஆதேச ஏஷ உபதேச ஏததநுசாஸநம்; ஏவமுபாஸிதவ்ய மேவமுபாஸிதவ்யம்.**

பொழிப்புரை.

இது கட்டளை, இது உபதேசம், இது பிரமாணவசனம்; இவ்விதமாக கடவுளை உபாசித்தல் வேண்டும்.

விசேஷ உரை.

ஹிமாசலாதி பர்வத பிரதேசங்களில் பல்லாண்டுகளுக்கு முன் பரமஹம்ஸர்களாகவும், தபோநிதிகளாகவும், எதீந்திரர்களாக எழுந்தருளியிருந்த மஹரிஷிகள் தாம் திருவாய்மலர்ந்தருளிய தீர்க்கதரிசன வாக்கியங்களடங்கிய இந்த வேதத்தை உபதேச கிரந்தமாகவும், பிரமாண வாக்கியங்களாகவும் கொண்டு அநுஷ்டிக்க வேண்டுமென்று கட்டளையிடுகின்றனர். யார் இந்த வேதத்தில் சொல்லிய தீர்க்கதரிசன வாக்கியங்களின்படி பரமேசுவரருடைய இருப்பை நம்பி, அவரை உண்மையான பக்தியினால் உபாசித்து, அவருக்குப்பிரியமான சாமானிய தருமங்களைச்செய்து வருகிறார்களோ; அவர்கள், எந்தகாலத்திலும், எங்கிருக்கினும், எப்படிப்பட்டவர்களாகிலும் இகபரசுகத்தையடைவார்கள் என்பது ஸத்தியம். அவர்களே பிரம்மாநந்தர்கள்; அவர்களுக்கு இதுவே உபதேசம்.

This is the commandment. This is the teaching. This is the authority. Thus should God be worshipped.

---

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ஹரி: ஓம்.

---

ஆரியர் வேதமென்னும் இந்து பைபிளின்




PRINTED AT THE "CRESCENT PRESS," COIMBATORE.